யூதபதிகள் சூழப் புறப்பட்டு நிகும்பலைக்குச்சென்று பார்க்க, அங்கே முதலாவதாக அமைத்திருந்த முள்கோட்டையை லட்சுமணர் ஆக்நேயாஸ்த்ர ப்ரயோகஞ்செய்து எரித்துவிட்டு, இரண்டாவ தான ராட்சஸக்கூட்டங்களை பாணங்களை எய்து கொன்றுவிட்டு, மூன்றாவதாய ஸர்ப்பக் கோட்டையை கருடாஸ்திரத்தினால் அழித்து, நான்காவதாய புலிக்கோட்டையை பர்வதாஸ்திரத்தால் தொலைத்துவிட்டு, ஐந்தாவதாய அக்நிக்கோட்டையை மேகாஸ்திரத்தால் அவித்து விட்டு, ஆறாவதாய வாயுக்கோட்டையை தாம் உட்கொண்டு, ஏழாவதாய ஜலக் கோட்டையை வாயுவாஸ்திரத்தால் வற்றவடித்து, அதற்கப்பாற்சென்று பார்த்தார்கள். அங்கு அவர்களுக்கு இந்திரஜித்தைப்பற்றிய தொன்றும் தென்படவில்லை. இதைக்கண்ட அனுமார் கோபங்கொண்டு அங்கேயிருந்த யோகினிவடத்தைப் பிடுங்கிப் பார்க்க நினைத்துப் பிடுங்கப் போனார். அப்பொழுது அம்மரத்திலிருந்த யோகினியானவள் அனுமாரைப் பார்த்து "ஐயா! மரத்தைப் பிடுங்கவேண்டாம். இதோ இங்குக் கல்லைக்கொண்டு மூடியிருக்கும் குகைக்குள் இந்திரஜித்திருக்கிறான். அங்குச் சென்று பாருங்கள்" என்றுதெரிவித்தாள். உடனே அனுமார் சிலையைத் தமது பாதங்களால் சின்னாபின்னப் படுத்திக் குகையினுட்சென்று இந்திரஜித்தை மிரட்டினார். இதைக் கண்ட மேகநாதன் திடுக்கிட்டு ஹோமத்தை விட்டெழுந்திருந்து கோபாவேசத்துடன் வெளியே வந்து ரதமேறி லட்சுமணரை எதிர்த்து, அவரை மர்மங்கள் நோகப் பேசி அஸ்த்ரசஸ்த்ரங்களாலும் பலை முதலியவைகளாலும் யுத்தம்புரிந்தான். லட்சுமணரும் உடனே பல பாணங்களை எய்து அவனது ரதம் அசுவம் தேர்ப்பாகன் தநுசு அவனது திடமான கவசம் இவைகளை க்ஷணநேரத்தில் சின்னாபின்னமாக்கினார். பின்பு மேகநாதன் வேறொருதனுசைக் கையிலேந்தி தரையில் நின்றுகொண்டு ஆயிரக்கணக்காகப் பாணங்களைப் பிரயோகஞ்செய்து லட்சுமணருடைய கவசத்தைச் சேதித்தான். உடனே லட்சுமணர் மிகக் கோபங்கொண்டு சிரேஷ்டமான ஒரு பாணத்தைப் பிரயோகஞ் செய்து அம்புகளைத் தாங்கிக்கொண்டிருந்த இந்திரஜித்தினுடைய வலதுகையை அறுத்தெறிந்து அது அவன்

இருகத்திற்போய் விழும்படி செய்தார். பிறகு மேகநாதன் மனங் கலங்கி இடது கையில் ஒரு சூலாயுதத்தை எடுத்துக்கொண்டு லட்சுமணரைத் துரத்தினன். அவர் உடனே சிரேஷ்டமான ஒரு பாணத்தைப் பிரயோகித்து, அவனுடைய இடது கரத்தை யும் அறுத்து அதனைச் சூலாயுதத்துடன் ராவணன் முன்னிலை யில் விழும்படி செய்தார். அக்கை அப்படியே ராவணன் முன் னிலையில் விழுந்து யாவருக்கும் ஆச்சரியத்தை உண்டாக்கியது. இதன் பின் இந்திரஜித் வாயைத் திறந்துகொண்டு லட்சுமணரை எதிர்த்தான். லட்சுமணர் ராமநாம அடையாளமுள்ள ஒரு திவ்ய சரத்தை எடுத்து ராமரை மனத்தில் தியானித்துக்கொண்டு இந்திரஜித்தின் பேரில் பிரயோகித்தார். இந்தப் பாணமானது அழகிய குண்டலங்களோடும் கிரீடத்தோடும் இந்திரஜித்தி னுடைய தலையை அறுத்துக் கீழே வீழ்த்திற்று. இதைக் கண்ட தேவர்கள் மிகக் களிப்படைந்து லட்சுமணர்மேல் மலர்மாரி பொழிந்து வாழ்த்தினர்கள். லட்சுமணர் சிறிதுநேரம் அங்கி ருந்து சிரம பரிகாரம் செய்துகொண்டு பிறகு ஜயசங்கம் ஊதி னர். அச்சங்கநாதத்தை ஸீதை கேட்டு அது யாருடைய சங்க நாதம் என்று தெரிந்துவரத் தன்னருகி லிருந்த திரிசடையை அனுப்பி அவளால் லட்சுமணர் இந்திரஜித்தைச் சங்கரித்துச் சங்கம் முழக்கினர் என்பதைக் கேட்டு மனமுவந்தாள். பிறகு மாருதி மேகநாதனுடைய தலையை எடுத்துக்கொண்டு போய் ஸ்ரீராமபிரானுக்குக் காட்டவேண்டுமென்று லட்சுமணரைத் துரி தப் படுத்தினர். உடனே அவர் அங்கதன்மே லேறிக்கொண்டு விபீஷணனுடன் புறப்பட்டு வாத்திய கோஷங்கள் முழங்க ஸ்ரீராமபிரான் முன்பு சென்று அவரை வணங்கி மேகநாதனது தலையைக் காட்டினர். ராமபிரான் அதைப் பார்த்து மகிழ்ந்து தம்பி லட்சுமணரைத் தழுவிக்கொண்டார்.

இங்கிவ்வாறிருக்க, ராவணன் சபையில் தன் முன்னிலையில் இந்திரஜித்தினுடைய கரம் அறுந்து வந்து விழக்கண்டதும் மகா துக்கமடைந்து தரையில் விழுந்து மூர்ச்சை யடைந்தான். பிறகு

சிறிது நேரத்திற்கெல்லாம் ராவணன் மூர்ச்சை தெளிந்து எழுந்து ஒரு கத்தியை உருவிக்கொண்டு ஸீதையைக் கொல்வதற்காக மிகக் கோபத்துடன் ஓடினான். இதைப் பார்த்த மகா புத்திசாலியாகிய சுபார்சுவன் என்ற மந்திரி ராவணனுடைய கத்தியேந்திய கையைப் பிடித்துத் தடுத்து “ஐயா! எல்லாந் தெரிந்த மகா பிரபுவாகிய தாங்கள் ஒரு ஸ்திரீயை இவ்விதம் கோபங்கொண்டு கொல்லச் செல்வது நீதியாமா? ஆகையால் நாம் யாவரும் யுத்தத்துக்குச் சென்று ராமலட்சுமணர்களைக் கொன்றுவிடுவோம். பிறகு ஸீதையை நீர் அடையலாம். சீக்கிரம் புறப்படும்” என்று சொல்ல ராவணன் கோபந்தணிந்து திரும்பினான். சுலோசனை யென்ற இந்திரஜித்தின் மனைவி அங்குப் பாணத்துடன்விழுந்துகிடந்த இந்திரஜித்தின் கரத்தை நோக்கி அவனுடைய பராக்ரமங்களை நினைத்துக்கொண்டு மிகவும் வருந்தி யழுதாள்.

அந்தக் கரமானது மிகவும் பிரலாபித்து அழுது வருத்தப்படும் சுலோசனைக்கிரங்கி, தன்னுடன் வந்த பாணத்தை இரத்தத்தில் தோய்த்து தரையில்—“ஏ மாதரசே! நீ சிறிதும் வருத்தப்பட வேண்டாம். சாக்ஷாத் ஆதிசேஷாவதாரமாகிய லட்சுமணருடைய சரப்பிரயோகத்தால் அறுபட்டு இப்பொழுது யான் முத்திக்குப் பாத்திரவானானேன். நீயும் ராமபிரானை யடைந்து உனது பர்த்தாவின் சிரசை யாசி; அதை உடனே உனக்குக் கொடுத்து அதனுடன் நீயும் அக்கிப் பிரவேசஞ்செய்து என்னை அடையென அநுக்கிரகிப்பார்” என்று எழுதிற்று. இதைச் சுலோசனைபடித்துப் பார்த்து மகிழ்ச்சியுற்று, ராவணனிடமும் மண்டோதரி யிடமும் அனுமதிபெற்று அலங்காரஞ்செய்துகொண்டு பல்லக்கிலேறி ராமரிடம் சென்றாள். இவள் இப்படி வருவதைப் பார்த்த வானரசைன்னியங்கள் இதோ ஸீதையை ராவணன் நமக்குப் பயந்து அனுப்பிவிட்டான் பாருங்களென்று சொல்லிக்கொண்டு அவளைப் பார்த்து ஓடிவந்து பல்லக்கைச் சூழ்ந்துகொண்டு பார்க்க அங்கே ஸீதையில்லா திருக்கக் கண்டு பல்லக்குப்போகிகளை இவள் யாரென்று விசாரித்து அவர்கள் மூலமாகச் சுலோசனை யென்றறிந்து,

திரும்பி ராமபிரானிடம் சென்றன. சுலோசனை பிறகு ராமரிடம் சென்று பல்லக்கை விட்டு இறங்கிச் சிரங்குனிந்து பன்முறை வணங்கி, தன் பர்த்தாவின் சிரசை யாசித்தனள். ராமர் அவளைப் பார்த்து "ஏ பெண்ணே! இப்பொழுது உனக்கிரங்கி உன் பர்த்தாவைப் பிழைப்பிக்கின்றேன். நீ அக்நிப்பிரவேசம் செய்யவேண்டாம்; இது உனக்குப் பிரியமா?" என்றனர். அவள் "பிரபுவே! அப்படி என் பர்த்தா பிழைப்பாரே யாயின் மோக்ஷஹேதுவான லட்சுமணருடைய கையால் மரண முண்டாகாதாகையால், அவரைப் பிழைப்பிக்க வேண்டாம்" என்று கூறி மகிழ்ந்து ராகவரை வணங்கி வானரங்களின் மூலமாகத் தன் கணவனுடைய சிரசைக் கண்டு, அதற்கு வணங்கி அதை யெடுத்துக் கொண்டு லங்காபட்டணத்திலிருந்த இரண்டு கரங்களையும் வரவழைத்து, இவைகளோடு நிகும்பலைக்குச் சென்று அங்கிருந்த தன் கணவனுடைய சரீரத்தில் அவைகளைச் சேர்த்து அக்நி வளர்த்து, அதில் அந்தத் தேகத்தைப் போட்டு அதனுடன் தானும் பிரவேசித்தாள். உடனே இருவரும் திவ்யதேகம் பெற்று வைகுண்ட பதவியை யடைந்தார்கள்.

இதன்பின் ராவணன் தன் மித்திரர்களுடனும் சைன்னியங்களுடனும் புறப்பட்டு ராமர் முன் வந்து அவரை எதிர்த்தான். உடனே ராமர் பாணங்களைப் பிரயோகித்து, கூட வந்த அரக்கர்கள் யாவரையும் ஒழித்துவிட்டு, ராவணன் பேரில் ஒரு பாணத்தைப் பிரயோகிக்க, அவனை, அப்பாணம் தூக்கிக்கொண்டு போய் லங்கையின் மத்தியில் போட்டுவிட்டது. இப்படி விழுந்த ராவணன் எழுந்து தன்னுடைய கிருகத்திற்குச் சென்று சற்றுச் சிரமபரிகாரஞ் செய்துகொண்டபின், தூதர்களை அனுப்பித் தன் மாமனார் மயனை வரவழைத்து, அவனைக்கொண்டு மாயையால் ஸ்ரீராமபிரானின் சிரசொன்றைச் செய்வித்து, அதைக் கையிலெடுத்துக்கொண்டு ஸீதைக்குக் காட்டுவதற்காக அசோகவனம் சென்றான். இச்சூழ்ச்சியை அறிந்த பிரம்மதேவன்; ஸீதாபிராட்டியிடம் சென்று, "ஏ ஜானகி! உன்னை மோசம் பண்ணுவதற்கு ராவணன் தன் மாயையால் ராமபிரானது சிரசொன்று செய்து அதை இப்பொழுது இங்குக் கொண்டுவந்து உனக்குக்

காட்டுவான். அதைப் பார்த்து நீ சிறிதும் சஞ்சலப்படவேண்டாம்" என்று தெரிவித்துவிட்டு மறைந்தார். இவர் மறைந்த அந்த க்ஷணமே ராவணன் ஸீதையின் அருகே வந்து, ராமர் சிரசைக் காண்பித்து, "ஏ ஸீதா! இதோபார் உன் கணவனுடைய சிரசு, அவன் இறந்தான்; இனி என்னைச் சேர்" என்றான். இதைக் கேட்டதும் ஸீதாபிராட்டி தலை குனிந்துகொண்டு "ஏ துஷ்டா! அதி சீக்கிரத்தில் உன்னுடைய தலைகள் ராம பாணத்தாலடிபட்டு யுத்தகளத்தில் விழப்போகின்றன. அதை நான் பார்க்கப்போகின்றேன்" என்றாள். அம்புகளுக்கொப்பான இப்படிப்பட்ட வார்த்தைகளைக் கேட்டதும் ராவணன் வெட்கமடைந்து, தலைகுனிந்து, தன் கிருகஞ் சென்றான்.

இப்படியிருக்க வானரவீரர்கள் ராமபிரானிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு கோடிக்கணக்கான தீப்பந்தங்களை யெடுத்துக் கொண்டு க்ஷணநேரத்தில் லங்கைக்குட் சென்று, கண்டவிடங்களிலெல்லாம் தீயிட்டு, லங்கையை எரித்தார்கள். இப்பொழுது லங்கையானது முன் மாருதி எரியூட்டிய காலத்தில் எப்படி அலங்கோல மடைந்ததோ அப்படியே அலங்கோல மடைந்தது. இவ்விதம் தன் அரண்மனைகளும் பட்டணமும் எரிவதைப்பார்த்த ராவணன் ஒரு மேகாஸ்திரப் பிரயோகஞ் செய்தான். உடனே ஆகாசத்திலிருந்து மழை பொழிந்து தீயை அவித்தமையால், வானர வீரர்கள் வெளியே ஓடிப்போய் விட்டார்கள்.

பிறகு ராவணன் தனக்கு சுக்ராசாரியர் போதித்தபடி ஆபிசார ஹோமம் செய்ய நிச்சயித்து, லங்காபட்டணத்தின் கோட்டைவாசல்களை மூடிவிட்டு, உள்ளே ஒருவரும் பிரவேசியாதபடி காவல்கள் அமைத்து, நிகும்பலையில், நடந்த ஹோமத்திற்கு இந்திரஜித்து கொண்டுபோனபடியே ஹோம திரவியங்களை எடுத்துக்கொண்டு, இரத்தத்தில் ஸ்நானஞ் செய்துவிட்டு முண்டமாலை தரித்து, இரகசியமான ஒரு குகைக்குட் சென்று, அங்கிருந்த ஹோமகுண்டத்தின் எதிரே பிரேதாசனமிட்டு அதிலுட்கார்ந்து கூட வந்தவர்களை வெளியே காவலாகவிருக்கச் செய்து, குகைத் துவாரத்தை ஒரு பெரிய கல்லைக்கொண்டு மூடி, தான் ஏகாங்கியா

யும் மௌனமாயுமிருந்து ஹோமகுண்டத்தில் அக்நிவளர்த்து அதற்கு நாற்புறங்களிலும் சதுரமாக சஸ்திரங்களைப்பரப்பி, சத்ரு சங்கார சங்கற்பஞ் செய்து பத்து வயதிற் குட்பட்ட குழந்தைகளின் தலை, மாம்சம் இரத்தம் இவைகளால் ஹோமஞ்செய்தான்.

இப்படி ராவணன் செய்த ஹோமகுண்டத்திலிருந்து ஏராளமாகப் புகை கிளம்பி வெளியே பரவிற்று. இதைப் பார்த்த விபீஷணன், சற்று யோசித்துப்பார்த்து, அதனுண்மை இன்னதெனவறிந்து, ராமரிடஞ் சென்று, அவரைப்பார்த்து, "மகாபிரபுவே! இப்பொழுது லங்கையில் ஓர் இரகசியமான இடத்தில் ஓர் ஆபிசார ஹோமம் நடக்கிறது. இந்த ஹோமம் நிறைவேறுமாயின், ராவணனை யாரும் வெல்லுவதரிது" எனத் தெரிவித்தான். உடனே ஸ்ரீராமபிரான் வானரசிரேஷ்டர்களை வரவழைத்து, விபீஷணனுடைய சொற்படி நடவுங்கள், என ஆஞ்ஞாபித்தார். உடனே வானரங்கள் விபீஷணனது சொற்படியே லங்கையின் கோட்டைவாசலுக் கருகேசென்று அக்கோட்டை வாசல் அடைக்கப்பட்டிருப்பதைப் பார்த்து மதிலைத் தாண்டிக் குதித்து ராவணனுடைய அரண்மனைசென்று அங்கே காவலாயிருந்த அரக்கர்கள் யாவரையும் அதமாக்கிவிட்டுக் குகையைத் தேடினார்கள்; குகை அகப்படாமல் அங்குமிங்கும் அலைந்து கொண்டிருந்தார்கள். இதைப்பார்த்த விபீஷணன் மனைவி சரமை யென்பவள் குகையிருக்கும் இடத்தைக் கையால் சூசிப்பித்தாள். இதைக் கண்ட அங்கதன் உடனே அவ்விடம் சென்று, குகைத் துவாரத்தில் மூடியிருக்கும் சிலையைத் தன் கால்களால் உதைத்துப் பொடியாக்கிவிட்டு, உள்ளே புகுந்து ஹோமகுண்டத்தினருகிலிருந்து தியானித்துவரும் ராவணனைக் கைமுஷ்டியினாலே குத்தினான். மற்ற வானரங்களும் வெளியிலிருக்கும் மரங்களைப் பிடுங்கிக் கொண்டு குகையினுட் பிரவேசித்து ராவணனை அடித்தன. இவைகள் ஒன்றுக்கும் ராவணன் அசையாமல் தியானத்திலிருப்பதைக்கண்டு, உடனே ராவணன் மனைவி மண்டோதரியைத் தலைமயிலைரைப் பிடித்து இழுத்துக்கொண்டு வந்து ராவணன் முன்னே நிறுத்தினார்கள். வானரங்கள் பிடித்திழுத்து வந்த வேகத்தினால் மண்டோதரியினுடைய ஆடை, கஞ்சுகம் முதலியவைகள் நழுவிப்போய் விட்டமையால், நிர்வாணமாக நின்று

அழுதாள். அதைக் கேட்டவுடன் ராவணன் ஹோமத்தியா னத்திலிருந்து திடுக்கிட்டெழுந்தான். ராவணன் எழுந்தவுடன் வானரங்கள் யாவும் தாங்கள் வந்தகாரியம் நிறைவேறியதென்று, நினைத்து ஸ்ரீராமரிடம் போய்ச்சேர்ந்தன.

பிறகு மண்டோதரி மிகவும் விசனத்துடன் ராவணனைப் பார்த்து, "ஏ நாதா! ஸீதையை ராமரிடம் விட்டுவிடுங்கள். இலங் கைக்கு விபீஷணனை அரசனாக்கிவிடுங்கள். நாமிருவரும் வனத் துக்குச் சென்று சுகமாகத் தவம் புரிவோம், தயைசெய்து நான் சொல்வதைக் கேட்கவேண்டும்" என்று பிரார்த்தித்தாள். ராவ ணன், "ஏ பிரிய நாயகியே! என் கருத்தைக்கேள். இப்பொழுது வந்திருக்கும் ராமர் சாக்ஷாத் மகாவிஷ்ணுவே. ஸீதை லட்சுமி தேவியே! இவைகளை நான் நன்றாய் அறிவேன். நான் ஸீதையை அபகரித்துவந்திருப்பது ராமர் கையால் மரணமடைய வேண்டு மென்றேயாம். நான் இதன் மூலமாய்த்தேகத்தை யொழித்துபரம பதத்தை அடையப்போகிறேன். நீ எனக்குச் செய்யவேண்டிய கர்மங்களை விதிப்படி நடத்திப் பிறகு நீயும் அக்கினிப்பிரவேசம் செய்து என்னுடன் பரமபதத்தை யடையக்கடவாய்" என்று கூறிவிட்டு அங்கிருந்து வெளிப்புறப்பட்டு இரதமேறி யுத்தத்திற் குப் புறப்பட்டான். வழியில் மொட்டையனைச் சந்தித்தான்; உடனே அவன் தலையிலிருக்கும் விசித்திரமான கிரீடங்களில் ஒன்று தலையிலிருந்து கீழே விழக்கண்டான். இவைகளைக் கண் டதும் அச்சத்துடன் யுத்தகளஞ்சென்று பாணங்களை வருஷித்து வானர சைன்னியங்களை மிகவுந் தொந்தரவு செய்தான். அப் பொழுது தன் ரதத்தில் வைத்திருந்த மயனால் செய்யப்பட்ட மாயா ஸீதையை வானரங்கள் யாவும் பார்க்க ரதத்திலிருந்தபடி யே கத்தியை எடுத்து வெட்டிக்கொன்றான். இதைக் கண்ட வானரங்கள் யாவும் பயந்து ஆ! ஆ! வென்று கூச்சலிட்டு மிகவும் வருத்தமடைந்து ராமரிடந் தெரிவிக்க ஓடின. இப்பொழுது பிர்மதேவர் ஸ்ரீராமபிரான் முன்வந்து "ராவணன் ரதத்திலிருந்து கொன்றது மாயா ஸீதை ஆகையால் நீங்கள் யாவரும் வருத்தப் படவேண்டாம்" என்று கூறி மறைந்தார். ஸ்ரீராமபிரான் முத லிய யாவரும் இதைக்கேட்டு விசனத்தைவிட்டு ஸந்தோஷமடை ந்து ராவணனுடன் யுத்தத்துக்குப் புறப்பட்டார்கள்.

இப்பொழுது இந்திரனுடைய உத்தரவுப்படி அவனுடைய இரதசாரதியாகிய மாதலி என்பவன் அநேக சஸ்த்ரங்கள், அஸ்த்ரங்கள், அசனித்வஜம், பரந்துயர்ந்த குடை இவைகளோடு கூடிய ரதத்துடன் ராமபிரான் முன்வந்து வணங்கி "சுவாமி! இச்சமயத்தில் எங்கள் அரசன் இந்திரன் இந்த ரதத்தைத் தங்களுக்குக் கொடுக்கும்படி ஆஞ்ஞாபித்தார். தயைசெய்து ரதத்தை பெற்றுக்கொள்ள வேண்டும்" எனக் கூறித் தான் கொண்டுவந்த ரதத்தை அளித்தான். ராமபிரான் அந்த ரதத்தை மகிழ்ச்சியுடன் பெற்று அதிலேறிக்கொண்டு, ராவணனுடன் பலவிதமாக யுத்தம் புரிந்தார். இப்பொழுது ராவணன் ராமபிரான் மீது ஆக்நேயாஸ்த்ரத்தையும் தெய்வாஸ்த்ரத்தையும் பிரயோகித்தான். ராமரும் அவ்வஸ்திரங்களையே பிரயோகித்து, அவைகள் தம்மீது படாதபடி தடுத்தார். பிறகு ராவணன் ஒரு ஸர்ப்பாஸ்திரப் பிரயோகஞ் செய்தான். ஏராளமான சர்ப்பங்கள் தம்மை எதிர்த்து வருவதைப் பார்த்த ராமர், கருடாஸ்திர பிரயோகஞ்செய்து அவைகளை யொழித்தார். இப்படித் தான் பிரயோகித்த அஸ்திரங்கள் யாவும் பயனற்றுப் போனதைப் பார்த்த தசானனன், மேகாஸ்திரத்தைப் பிரயோகித்தான். அதை ராமர் ஒரு வாயுவாஸ்திரப் பிரயோகஞ்செய்து தொலைத்து உடனே ஒரு ஆக்நேயாஸ்திரப் பிரயோகஞ் செய்தார். அந்த அஸ்திரத்தைராவணன் ஒரு மேகாஸ்திரம் விடுத்து அவித்தான். பதினாயிரம் யானைகளும், இருபதினாயிரம் குதிரைகளும், நூற்றைம்பது ரதங்களும், நூறுகோடி காலாட்படைகளும் ராமபிரான் யுத்தம் செய்யும்போது மாண்டு போனால், அப்பிணக் குவியல்களுக்கிடையே ஒரு கவந்தம் எழுந்து கூத்தாடுவது வழக்கம்? இப்படி ஒரு கோடி கவந்தம் கூத்தாடினால், ராமபிரான் கோதண்டத்திலிருக்கும் மணிகளில், ஒரு மணி ஒரு தரம் சத்தமிடுவது வழக்கம். இப்பொழுது இந்த யுத்தத்தில் ராமபிரான் கோதண்டத்திலிருக்கும் இருபது மணிகளும் அரை ஜாமநேரம் கலகலவென்று சத்தமிட்டன. அச்சமயத்தில் தேவர்கள், கந்தர்வர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள் முதலிய யாவரும் தங்கள் தங்கள் விமானங்களிலேறி மனமகிழ்ச்சியோடு யுத்தவேடிக்கை பார்க்க ஆகாசத்தில் வந்து நின்றார்கள். அப்பொழுது ராவணன், பலபாணங்களைப் பிரயோகித்து, ஸ்ரீராமபிரானது ரதத்திலிருக்கும் அசனித்வஜத்தை அறுத்துத் தள்ளினான். உடனே ராமபிரான் தமது ரதத்தின் கொடியறுந்து போனதைக் கண்டு அருகிலிருக்கும் மாருதியை யழைத்து 'நீ ரதத்தின் பேரில் ஒரு க்ஷணநேரம் த்வஜமாக இரு" என்று

ஆஞ்ஞாபித்தார். மாருதி, "நல்லது அப்படிச்செய்கிறேன்" என்று ஒரு பனைமரத்தைப் பிடுங்கிக்கொண்டு வந்து ரதத்தில் நாட்டி அதன்பேரில் ஸந்தோஷத்துடன் ஏறிநின்றார். இதைக்கண்ட ராவணன் ஒன்பது பாணங்களைப் பிரயோகித்து, ரதத்தில் நாட்டியிருந்த பனைமரத்தை மாருதியுடனும், சாரதியாகிய மாதலியையும், ரதத்தில் பூட்டியிருந்த குதிரைகளையும், ராமபிரான் கையிலிருக்கும் இந்திர தநுசையும், குடையையும் அறுத்துக் கீழே தள்ளிவிட்டான். மாதலியும் மாருதியும் மூர்ச்சித்துப் போனார்கள். பிறகு க்ஷணநேரத்திற்கெல்லாம் ஹநுமார் மூர்ச்சை தெளிந்து எழுந்தார். ஸ்ரீராமபிரான் அவருடைய தோளில் ஏறிக்கொண்டு ராவணனோடு பயங்கரமான யுத்தம் புரிந்தார். ராவணன் பரிகாயுதத்தை எடுத்து மாருதியின் மார்பில் விடுத்தான். அனுமார் மூர்ச்சையடைந்து கீழே விழுந்து விட்டார்! ஸ்ரீராமபிரான் அந்தட்சணமே தமக்குச் சொந்தமான ரதத்தை நினைத்தார். உடனே அந்த ரதமானது நான்கு குதிரைகள் பூட்டப்பெற்று தாருகன் என்ற சாரதியுடன் ஆகாசத்திலிருந்து வந்து ராமர் முன் நின்றது. அதில் பல சஸ்திரங்களும், கதை பத்மம், அழகிய கழுத்தையுடைய சைப்பியன், ஒரு மேகம், தங்கத் தடி, இரண்டு சாமரங்கள், சார்ங்கம் என்னும் பேர்கொண்ட தநுசொன்று இவைகள் நிறைந்திருந்தன. இந்த ரதத்தைக் கண்டதும் ராமர் அதை வலம் வந்து வணங்கிச் சந்தோஷத்துடன் அதன் மேலேறி நின்று தமக்குரித்தான சார்ங்கம் என்னும் தனுசைக் கையிலெடுத்து, அதில் சிரேஷ்டமான பாணங்களைத் தொடுத்துப் பிரயோகித்து ராவணனுடைய ரதத்தைப் பொடியாக்கி, அவனைப் பயமுறுத்தினார். உடனே ராவணன் மற்றொரு தேரிலேறிக்கொண்டு ராமபிரானை எதிர்த்தான். உடனே ராமர் கூர்மையுள்ள பாணங்களைப் பிரயோகித்து, ராவணனுடைய சிரங்களை அறுத்துத் தள்ளினார். அத்தலைகள் ஆகாசத்திற் கிளம்பி, ஓகோ!, நமக்கும் தசரதநந்தனது கையால் மரணங் கிடைத்ததே என நினைத்து மகிழ்ந்து அவருடைய பாதபத்மங்களில் வணங்க விரும்பி யுத்தகளத்தை நோக்கிச் சிரித்துக்கொண்டு வந்தன. கோரப்பற்களைத் திறந்துகொண்டு தம்மை நோக்கி வரும் அத்தலைகளை ராமபிரான் பார்த்து, இவைகள் நம்மை இம்சிக்க வருகிறதென்று எண்ணிப் பயந்து, அத்தலைகள் சின்னாபின்னமாகும்படி பாணப்பிரயோகஞ் செய்தார். அப்படிச் சின்னாபின்னமான அத்தலைகள் நூற்றொரு பாகங்களாகப் பிரிந்தன. சதமுக ராவணனுடைய தலைகளும் யுத்தகளத்தில் ஆயிரத்தொரு பிரிவுக

ளாக அறுபட்டனவென்பது கற்பபேதமென்று சிலர் கூறுகிறார்கள். ஸ்ரீராமபிரான் இவ்விதம் ராவணனுடைய தலைகளைச் சேதித்தும் அவன் மரணமடையாமல் முன்போலவே நிற்பதைப்பார்த்து சந்தேகங்கொள்ள, அதைக்கண்ட விபீஷணன் ராவணனது நாபியில் குண்டலாகாரமாக அமுதம் நிலைபெற்றிருக்கிறதென ராமருக்குத் தெரிவித்தான். இதைக்கேட்டதும் ராமபிரான் ஓர் ஆக்நேயாஸ்திரப் பிரயோகஞ்செய்து, அந்த அமுதத்தை வற்ற வடித்து மீண்டும் சில கணைகளைப் பிரயோகித்து, அவனுடைய சிரங்களையும், புஜங்களையும் அறுத்துத்தள்ளினார். பிறகு ராவணன் தன் பிரதான சிரசுடனும் இரண்டு கைகளுடனும் யுத்தரங்கத்தில் நின்றான். அந்தட்சணமே ராமருக்கும் ராவணனுக்கும் கண்டவர்கள் மனம் அஞ்சக் கொடூரமான யுத்தம் நடந்தது. இந்தச்சமயத்தில் ரதசாரதியாகவிருந்த தாருகன் ராமருக்கு ராவணனது மர்மஸ்தானத்தைக் குறிப்பிட்டுக் காட்டினான். உடனே ரகு சிரேஷ்டர் தசகந்தரன் மர்மஸ்தானத்தைக் குறிப்பிட்டு பிர்மாஸ்திரத்தால் அடித்தார். அந்தப் பிர்மாஸ்திரம் ராவணனது இருதயத்தைப் பிளந்து அவனையுங் கொன்றுவிட்டு ஸ்ரீராமபிரான் அம்புறாத் தூணியிற்புகுந்து தான் கிருதார்த்தனானதாக நினைத்து மகிழ்ந்தது. பின் ராவணனது தேகத்திலிருந்து ஆதித்தன்போற் பிரகாசிக்கும் ஒரு ஜோதி கிளம்பி விண்ணோர்கள் காண ரகு சிரேஷ்டரிடம் ஐக்கியமாயிற்று. இதைப்பார்த்த தேவர்கள் பரமானந்தமடைந்து ராவணாந்தகனாகிய ராமபிரான்மீது மலர்மாரி பொழிந்து, வாத்தியகோஷங்கள் செய்தார்கள். அப்ஸரஸ்திரீகள் நர்த்தனம் புரிந்தார்கள். அப்பொழுதே மண்டோதரியும் மரணமடைந்து தனது பர்த்தாவாகிய ராவணனுடன் வைகுண்டமடைந்தாள். பிறகு ராமபிரான் விபீஷணனைக்கொண்டு ராவணனுக்கு அபரக்கிரியை நடத்திமுடித்து அவனை லங்கைக்குள் அழைத்தேக லட்சுமணருக்கு உத்தரவுகொடுத்து, அவர் மூலமாக அவனுக்கு லங்கா ராஜ்ய பட்டாபிஷேகம் செய்வித்து, தாம் அவனிடம் நியாஸமாக வைத்திருந்த ஹநுமன் லங்கையைமீட்டு அதை ஹநுமந்தருக்குச் சொந்தமாக்கினார்; பிறகு விபீஷணன் முதலியவர்களுடன் மாருதியை அசோகவனத்துக்கனுப்பி ஸீதைக்குச் சகல விருத்தாந்தங்களையும் தெரிவிக்கச் செய்தார்.

ராவண வதமாகிய

11-வது சருக்கம் முற்றிற்று.



## 12-வது சருக்கம்.

### பரமசிவன் கூறுகிறார்.

ஏ பார்வதி! அசோகவனத்தில் சுக்ரீவன் முதலிய வானர சிரேஷ்டர்கள் அதி சீக்ரமாக ஸீதாபிராட்டிக்கு மங்கள ஸ்நானம் செய்வித்து, ஆடையாபரணங்களா லலங்கரித்து, பல்லக்கிலேற்றி வைத்து அநேக காவலர்களால் சூழப்பட்டுப் பற்பல வாத்திய கோஷங்கள் முழங்க, தேவதாஸிகள் நர்த்தனஞ் செய்ய, ஸ்ரீராம பிரான் முன்பு அழைத்து வந்தார்கள். உடனே ஸீதை பல்லக்கி லிருந்து கீழே இறங்கி, ராமபிரானை வணங்கி, வெட்கத்துடன் தலைகுனிந்து நின்றாள். ஸ்ரீராமபிரான் ஸீதை கற்புநிலை தவறாதவ ளென்பதைத் தாமறிந்திருந்தபோதிலும், உலகத்தவர்க்கு நம்பிக் கை யுண்டாக்குவதற்காக, பிராட்டியைப் பார்த்து, "ஏ வைதேகி சத்துருவினுடைய கிருகத்தில் வசித்தவளே! இனி நான் உன்னைப் பிர்மதேவன் பிரார்த்தித்தபோதும் ஒப்புக்கொள்ளேன். உன் னிஷ்டப்படி நீசெல்" என்றுகூறினார். இதைக்கேட்டதும் ஸீதை வருத்தமுற்று லட்சுமணரைக்கொண்டு ஒரு சிதை அடுக்குவித்து அதில் தீயைமூட்டி, அதன் முன்நின்று, "அக்நிபகவானே! ராம பிரானைத் தவிர வேறுபுருஷனை நான் என் மனத்திலும் கருதிய தில்லை. இது என்பால் உண்மையாயின், நீர் சீதளமாயிருந்து என்னை ஒப்புக்கொள்ளவேண்டும்" என்று சபதங் கூறிவிட்டு, அக்நியில் பிரவேசித்தாள். அப்பொழுது அதை ஆகாயத்திலிரு ந்து பார்த்த தேவர்களும் தசரதரும் அவிடம் வந்து, ராமரைப் பார்த்து, "ராமா! ஸீதை கற்பிற்சிறந்த மகா உத்தமி, நீ இதில் சிறி தும் சந்தேகங்கொள்ளாதே" என்று கூறினர். இதன்மேல் ராமர் ஸீதையை ஏற்றுக்கொண்டார். அக்நிபகவான், முன் பஞ்சவடி யில் தம்மிடத்தில் ஒப்புவித்திருந்த ராஜஸ அம்சமான ஸீதையை திவ்யாலங்காரத்துடன் ராமபிரானிடம் கொடுத்தார். ராமபிரான் மனமகிழ்ச்சியுடன் ஸீதையை ஏற்றுக்கொண்டு தமது மடியில் வைத்துக்கொண்டார். ராவண சங்கார நிமித்தமாகப் பஞ்சவடி தீரத்தில் சாத்விக, ராஜஸ, தாமஸமாகப் பிரிந்த மூன்று அம்சங் களும் இப்பொழுது சேர்ந்தன. பிறகு தேவர்கள் ஸ்ரீராமபிரா

னைத் துதித்தார்கள். அப்பொழுது அவர் தேவேந்திரனைப்பார்த்து இந்த யுத்தத்தில் இறந்த வானரர்கள் யாவரும் இப்பொழுதே உயிர் பிழைத்தெழுந்திருக்க வேண்டுமென்றார். அப்பொழுதே இந்திரன் அமுத மழை பொழியச்செய்து, யாவரையும் எழுப்பினான். பிறகு ஸ்ரீராமபிரான் உயிர்பிழைத்தெழுந்த வானரவீரர்களையும் மற்றவர்களையும் பார்த்தார். அந்த வானரவீரர்களில் ஒருவன் இல்லாமலிருக்கண்டு, மாருதியை யழைத்து "ஏமாருதி! வானரவீரர்களில் ஒருவனைக் காணோமே! அவனெங்கே" என்று வினவினார். மாருதி "சுவாமி! அவனைக் கும்பகர்ணன் விழுங்கிவிட்டான். இந்த யுத்தகளத்தில் அவ்வானரத்தின் நகம், மயிர், இரத்தம், எலும்பு இவைகளில் ஏதாவதொன்று இருக்குமாயின், பொழிந்த அமுத மழையால் அவன் ஜீவித்திருக்கவேண்டும். இது நிச்சயம். ஆனால் அமுதமழை பொழிவதற்குமுன் இறந்த அரக்கர்களும் பிழைத்து விடுவார்களென்று கருதி அவர்கள் யாவரையும் இழுத்துச் சமுத்திரத்தில் எறிந்துவிட்டோம். அதனாலேதான் இப்பொழுது அவனை இங்குக்காணவில்லை" என்றார். இதைக்கேட்டதும் ஸ்ரீராமபிரான், அங்கு அப்பொழுது வந்திருந்த தர்மராஜனது முகத்தைப்பார்த்தார். தர்மராஜன் பயந்து அவ்வானரத்தை அப்பொழுதே அவர்முன்பு உயிர்பெற்று நிற்கச் செய்தான். இதைப்பார்த்து ராகவர் மகிழ்ச்சியுற்றார். பின் இந்திரன் ரதசாரதியாகிய மாதலியை யழைத்து, "இனி நீர் உம்முடைய ரதத்துடன் ஸ்வர்க்கலோகம் போய்ச்சேரும்" என ஆஞ்ஞாபித்தார். மாதலி அவரை நமஸ்கரித்துவிட்டுத் தன் ரதத்துடன் தேவேந்திரலோகம் சென்றான். அப்பொழுது விபீஷணன் ஸ்ரீராமபிரானைப் பார்த்து, "பிரபுவே தாங்களும் இன்று மங்கள ஸ்நானம் செய்யவேண்டும்" என்று பலவாறு பிரார்த்திக்க, ராமர் பரதனுக்குத் தாம் கூறியந்த உறுதி வாக்கியத்தைநினைத்து அதற்குச் சம்மதியாமல் உடனே புஷ்பக விமானத்தை வரவழைத்து வானரசேனைகளுடன் அதில் ஏறினார். பிறகு இவர்களுடன் கூட தாருகன் கருடன் மகரத்வஜன் இவர்களும் புஷ்பக விமானத்திலேறினார்கள். கடைசியாக விபீஷணன் ஸ்ரீராமபிரான் உத்தரவு

பெற்று அவனும் விமானத்திலேறினன். அங்கு வந்திருந்த தேவர்களும் தசரதரும் ராமரிடம் விடை பெற்றுக்கொண்டு தத்தம் பதிக் கேகினர்.

இப்பொழுது விமானத்திலிருந்த விபீஷணன் ராகவரைப் பார்த்து, தங்களை நான் ஒருவிஷயம் கேட்க விரும்பியுள்ளேன். அதன் உண்மையை அடியேனுக்குத் தெரிவிக்க வேண்டுமெனக் கூறி "சுவாமி! பாதாளலோகத்திலிருந்துவந்த ஐராவண மைராவணர்கள் உங்களிருவரையும் எடுத்தேகுங் காலத்தில் தாங்கள் மௌனமாயிருந்ததின் காரணம் யாது? அங்குச் சென்று மகாபல சாலிகளாகிய அவர்களை க்ஷணநேரத்தில் கொன்றது எவ்விதம்" என்று கேட்டான். தசரதநந்தனர் இதைக்கேட்டதும் நகைத்து "ஏ விபீஷண! ஐராவண மைராவணர்களுடைய உயிர்நிலைகளாகிய வண்டுகளுக்கு மாருதியினுடைய கையால் மரணமுண்டாமென்பது பிரமதேவருடைய வரம். ஆகலால் அதை யனுசரித்து ஆஞ்சநேயரின் வருகையைநோக்கித் தாமதித்தேன். இரண்டாவது பாதாள லோகவாசிகளும் மகாபலசாலிகளுமான ஐராவண மைராவணர்களிடமிருந்து ராமபிரானை மீட்டுவந்தான் மாருதி என்கிற பௌருஷம் உலகத்திலெங்கும் பரவவேண்டு மென்பதேயாம். இக்காரணங்கள்கொண்டே அவ்வரக்கர்கள் எங்களை யபகரிக்குங் காலத்தில் அவர்களைக் கொல்லவில்லை. முன் ஒரு காக்கை உருவங் கொண்டு வந்தவனை ஒரு இஷீகாஸ்திரப் பிரயோகத்தில் கண்ணை யிழக்கும்படி செய்யவில்லையா? விசுவாமித்திர யாகத்தில் என்னுடன் அமர்புரிய வந்த மாரீசனை ஒருபாணத்தால் நூறு காத வழிக்கப்பாலுள்ள சமுத்திரத்திற் கொண்டுபோய்த் தள்ளவில்லையா? அப்படிப்பட்ட என்னுடைய சௌரியம் இப்பொழுது குறைந்து விட்டதா? ஒரு ஹுங்கார சப்தமாத்திரத்தில் அவர்களையான் கொல்ல வல்லவனன்றோ? பாதாள உலகத்தில் அவர்களோடு யான் யுத்தம் புரியுங்காலத்தில் அஸ்திரசஸ்திரங்களையும் எதிர்ப்பார்க்கவில்லை. ஆகையால் மாருதியின் சாமர்த்தியம் உலகில் பரவவேண்டுமென்பதற்கே நான் இவ்விதம் செய்தேனென்பதை அறி" என்று கூறினர். இப்படிச் சொன்னதும் மாருதி விபீஷண

னைப் பார்த்து நகைத்து "எவிபீஷண! மறந்துவிட்டாய்போலும்! சேதுபந்தனஞ்செய்த காலத்தில் யான் கர்வமடைந்து இலிங்கத்தைப் பிடுங்க யத்தனித்து வாலறுபட்டதை யறியாயோ? எல்லாம் ஜகதீசனாகிய ராமபிரானுடைய திருவருளேயன்றி வேறல்லவென்பதை உணர். ஆகையால் அவ்வசுரர்களைக் கொல்வது ராமபிரானுக்கு எம்மாத்திரம்? தமது பக்தனுக்குக் கீர்த்தியுண்டாக்க வேண்டுமென்பதே ராமபிரானுடைய கருத்து" எனக் கூறினார். விபீஷணன் இதைக்கேட்டதும் ராமபிரானிடத்தில் மகோத்தமமான பக்தியை யடைந்து நமஸ்கரித்து அவரைப் பூஜித்தான்.

• பிறகு ஸீதாபிராட்டி தனது பிரிய நாயகனைப் பார்த்து "பிராணநாதா! அசோகவனத்தில் என்னிடத்தில் பரிபூரணமான அன்புவைத்து எனக்குச் சகாயமாயிருந்த திரிசடைக்குத் தாங்கள் அநுக்ரகஞ் செய்யவேண்டும்" எனப் பிரார்த்தித்தாள். இதைக் கேட்டதும் ராமர் உள்ளம் பூரித்து ஸீதையின் வார்த்தையை மதித்து உடனே திரிசடைக்கு வஸ்திரம் திவ்யாபரணம் முதலியவைகளை யளித்து "ஏ திரிசடே! சர்வமங்களங்களையும் தந்தருளும் என் வாய்மொழியைக் கேள். கார்த்திகை, மாசி, சித்திரை, வைகாசி இந்த நான்கு மாதங்களிலும் பிராத ஸ்நானஞ்செய்யும் வேதியர்களின் முதல் மூன்று தினங்களின் ஸ்நானபலனை நீ பெற்றுச்சர்வ பாக்கியங்களையும் பெறுவாய். மனிதர்களில் எவர்கள் மேற்குறித்த நான்கு மாதங்களிலும் பௌர்ணமைக்குப் பிறகு மூன்று தினங்களில் ஸ்நானஞ் செய்யத் தவறுகிறார்களோ அவர்களுடைய திரு மாதப் புண்ணியத்தை என்சொற்படி நீயே கிரகித்துக்கொள்; பின்னும் இன்னொரு வரங் கூறுகிறேன் கேள். கிருக சுத்தி செய்யாமல் நடத்தும் புண்ணிய காரியத்தின் பலமும் கிருகசுத்தி செய்யாமல் செய்யும் சிராத்தபலமும் பிதிர்க்களின் கடனை விதிப்பிரகாரம் செய்து கோபிப்பானாகில் அந்தப் பலனும் காலில்நெய் தடவாமல் பாதப்ரக்ஷாளனஞ் செய்பவர்களின் பலனும் எள்ளில்லாமல் தர்ப்பணம் செய்கிறவர்களுடைய பலனும் தக்ஷிணை யில்லாமல் சிராத்தம் செய்கிறவர்களுடைய பலனும் உன்னையடையும்' என்று இவ்விதம் வரங்களைக் கொடுத்துவிட்டு அவளையும், சரமையையும்

அழைத்துக்கொண்டு விபீஷணன் சுக்ரீவன் மகரத்வஜன் முதலிய எல்லோருடனும் ஆகாயமார்க்கமாகப் புறப்பட்டு " ஏ ஸீதே இதோ இலங்கையைப் பார். இதுதான் சமுத்திரத்தின் மேல் சிலைகளால் கட்டிய அணை" என்று ஒவ்வொன்றாகக் காட்டி இராமேசுவரத்துக்கு நேரே வந்ததும் இதுதான் சேதுகட்ட ஆரம்பித்த இடமென்றும் இதுதான் சேது தீர்த்தம் என்றும் காட்டி விபீஷணனுடைய பிரார்த்தனைப்படி விமானத்திலிருந்து ராமர் அங்கு இறங்கிச் சேதுவைத் தமது கைக்கோதண்டத்தால் உடைத்துவிட்டார். அவ்விடத்துக்குத் தனுஷ்கோடி என்கிற பேர் உண்டாய் உலகெங்கும் பரவியது. ஆகையால் அத்தீர்த்தமும் ஸ்நானஞ் செய்கிறவர்களுக்குக் கைவல்லிய பலனைக் கொடுக்கும் மகிமையை யடைந்தது அன்று முதல் அவ்விடத்தில் கோதண்டபாணி யென்கிற ஸ்ரீராமமூர்த்தி ஆலயமேற்பட்டு பூஜிக்கப்பட்டு வருகின்றது.

இச்சமயத்தில் சம்பாதி ராமரிடம் வந்தார். ராமச்சந்திரர் அவரைத்தழுவிக்கொண்டு ஸந்தோஷமடைந்து இந்தச் சேது பந்தத்தில் உம்முடைய சகோதரன் ஜடாயுவின் பேரில் ஓர் உத்தமமான தீர்த்தமுண்டாக்குமென அதற்குச் சம்பாதி அவர்சொற்படி ஜடாயுவின் ஸந்தோஷ நிமித்தமாக ஒரு தீர்த்தத்தை உண்டாக்கினார். அன்று முதல் அதற்கு ஜடாயுதீர்த்தமெனப் பேர் வழங்கி வருகிறது. அதன் பிறகு ராமர் உத்தரவின் பேரில் சம்பாதியும் விமானத்தின்மேரி லேறினர். ராமர் புஷ்பகவிமானத்தி லேறிப் புறப்பட்டு ராமேசுவரத்துக்கு வந்து அங்கு ராமநாதலிங்கத்தைப் பூஜித்துவிட்டு ஸீதையைப் பார்த்து " ஏ ஸீதே! முன் இரகசியமாயிருந்து இங்கு வெளியா யிருக்கும் மந்திரார்த்தத்தைப் பார்; ஏ விதேக புத்திரி! இங்கேதான் யான் தர்ப்பசயனம் செய்து கொண்டேன்; இவ்விடத்தில் நவக்கிரக பூஜைக்காகச் சமுத்திரத்தின் ஒன்பது கற்கள் நாட்டப்பட்டன. இதோ சமுத்திரமும் எனது கட்டளைக்குக் கீழ்ப்படிந்து அலைகளை யடக்கிக்கொண்டு அமைதியா யிருக்கிறது பார்" என்று இவ்விதமான பற்பல ஆச்சரியங்களை ஸீதைக்குக் காண்பித்துக்கொண்டு கிஷ்கிந்தை சென்றார். அங்கே தமது வரவைக் கண்டு மகிழ்ந்து வணங்கின

வானர ஸ்திரீகள் யாவரையும் ஸீதைக்குக்காட்டி, அவர்களையும் விமானத்தி லேற்றிக்கொண்டு அங்கிருந்து பிரவர்ஷணகிரிக்குச் சென்று அதையும் ஸீதைக்குக் காண்பித்துப் பின் இருசியமூக பர்வதத்துக்குச் சென்று, அதையும் ஸீதைக்குக் காட்டி அவ்விட மிருந்து பம்பா ஸரஸை யடைந்து சுபகரமான கிருஷ்ணா நதியை யும் பீம நதியையும் காண்பித்து அங்கிருந்து கோதாவரி நதியை யடைந்து அந்நதிபால் அழகுவாய்ந்த பஞ்சவடி தீரத்திற்குச் சென்று அதையுங் காண்பித்துப் பிறகு அகஸ்திய முனிவர் சுதீக்ஷ்ண முனிவர் அத்திரி முனிவர் இவர்களுடைய ஆச்ரமங்களை யும் காண்பித்துப் பின்னர், சித்ரகூடபர்வதஞ்சென்று, அங்குள்ள யமுனை கங்கை முதலிய புண்ணியநதிகளையும் காட்டி அப்பால் பரத்வாஜாசிரமத்திற்கு நேரே செல்ல, அம்முனிவர், பிரார்த்த னைப்படி அங்கு இறங்கிச் சுகமாகஇருந்தனர். அன்றே மாசிமாதம் சுக்லபட்சம் சதுர்தசி திதிகூடிய பதினாலாவது வருஷத்தின் கடைசிநாள். பரத்வாஜர் தமது தவமகிமையால், பூலோகத்தில் ஸ்வர்க்கத்தைச் சிருஷ்டித்து சமஸ்த வானரவீரர்களுக்கும் ஸீதா தேவியுடன் ஸ்ரீராமசந்திரருக்கும் தக்க பூஜை செய்தார். அப் பொழுது ரகுநந்தனர் தமது சித்தத்தில் ஆலோசித்து மாருதி யைப் பார்த்து. "ஏ மாருதி! நீ இப்பொழுதே அயோத்திக்குப் புறப்படு; போகும்வழியில் சிருங்கிபேர புரத்திலிருக்கும் எனது நண்பன் குகனுக்கு நமது வருகையைத் தெரிவி" என்று கட் டளையிட்டார். ஆஞ்சநேயர் நல்லது அவ்விதமே செய்கிறேன் எனக்கூறி ராமபிரானை வணங்கிச் சிருங்கிபேரபுரம் சென்று குகனுக்குச் சங்கதிகளைத் தெரிவித்துவிட்டு உடனே அயோத்திக் குப் புறப்பட்டார். குகனும் உடனே பரமானந்தங்கொண்டு, ஸ்ரீ ராமபிரானைத் தரிசிக்கப் புறப்பட்டு அவரிடம் வந்துசேர்ந்தான்.

பதினான்காவது ஆண்டின் கடைசிநாள் முடிவாகப் போவ தைக்கண்டு நந்திக்கிராமத்திலிருந்த பரதன், தன் தமையன் ராமபிரான் அவரது வாக்குப்படி வாராமைக்கு வருந்தி, அக்கிப் பிரவேசஞ்செய்ய நிச்சயித்து சத்ருக்னனைப் பார்த்து, "அப்பா! யுத்தத்தில் ராமரையும், லட்சுமணரையும், ராவணன் கொன்று விட்டதாகத் தெரிகிறது. இல்லாவிடில் அவர்கள் இன்று வாரா திருக்கமாட்டார்கள். அந்த யுத்தத்தின் சகாயத்திற்காகப் பல அரசர்களை வரவழைத்தேன். நான் இன்று சூரியாஸ்தமனம்

வரையில் பார்த்துவிட்டு அக்நிப்பிரவேசம் செய்துவிடப்போகி றேன். இவ்வரசர்களுடன் நீ லங்கைக்குச் சென்று போர்செய்து ராவணனைக் கொன்று ஜனக புத்திரியாகிய ஸீதையை மீட்டுவந்து அதன் பிறகு உனது சகோதரராகிய எங்கள் மூவருக்கும் பர லோகக்கிரியையை நடத்து" என்று கூறி, சூரியனது அஸ்தமன த்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தான். இச்சொற்களைக் கேட்ட பட்டணத்து ஜனங்களும் தேசமன்னர்களும் வசிஷ்டர் முதலானவர்களும் சுமந்திரன் முதலிய மந்திரிமார்களும் மற்றுமுள்ள பட்டணத்து ஸ்திரீகளும் மனங்கலங்கி வருத்தமுற்று, பரதனைச் சூழ்ந்துகொண்டார்கள். அப்பொழுது பரதன் அவர்கள் யாவரையும் சமாதானப்படுத்தி, தான் சரயுநதிக்குச்சென்று, அக்கரையில் சிதையடுக்கி, தீமூட்டி ஸ்நானஞ்செய்து பற்பல தானங்களைப் பார்ப்பனர்களுக்குக் கொடுத்து அவ்வக்நியை ஏழுமுறை வலம்வந்து அக்நி, ராகுநாதர், ஸீதை, லக்ஷ்மணர் இவர்களுக்கு அநந்தகோடி நமஸ்காரஞ்செய்து, பின் தாய்மார்களையும் தன் குலகுரு வசிஷ்டமுனிவரையும் வணங்கிவிட்டு, குலதேவதையைத் தியானித்துச் சாயங்காலத்தில் நெருப்பினை நோக்கியவண்ணம் மேல் வடக்கு முகமாக நின்றான். இச்சமயத்தில் அங்கிருந்த ஸ்திரீ புருஷர்கள் யாவரும் கோலாகலத்துடன் ஆரவாரித்தார்கள். ஆகாசமார்க்கமாக வந்த வாயுநந்தனர், பரதன் அக்நிப் பிரவேசஞ்செய்யச் சித்தமாயிருப்பதைப் பார்த்தவுடன், அதிவேகமாகப் பரதனருகில் வந்து வாய்தடுமாற நின்று "ஏ பரத! நீ அக்நிப்பிரவேசம் செய்யவேண்டாம். ராமபிரான் ஸீதையுடனும் லக்ஷ்மணருடனும் பரத்வாஜாசிரமத்திற்கு வந்திருக்கிறார். வானரர்களுடன் நீ அவர்களை நாளையதினம் நிச்சயமாய்ப் பார்ப்பாய்; ராமரும் உன்னைப்பார்க்கமிகவும் ஆவல்கொண்டிருக்கிறார்" என்றுஅமுதத்தைச் செவிகளில் புகட்டுவதுபோல் இனிமையாகக் கூறினார்.

இவ்விதம் அமுதினுமினிய மொழிகளைக் கேட்டதும் பரதன் பரமானந்தமடைந்து, அவ்வக்நியை வலம் வந்து வணங்கிப் பின் வாயுநந்தனரைப்பார்த்து அவரையும் நமஸ்கரித்தான். மாருதியும் பரதனை வணங்கி ஆலிங்கனஞ்செய்து சந்தோஷகரமான ராவண சங்காராதி விர்த்தாந்தங்களைத் தெரிவித்தார். அவற்றைச் செவியுற்ற பரதன் உள்ளம் பூரித்து மனக்கவலை யொழிந்து உடனே

பட்டணங்களைப் பதாகைகளாலும் தோரணங்களாலும் அலங்கரிக்கும்படி மந்திரிகளுக்கு ஆஞ்ஞாபித்துவிட்டு, மாசி மாதம் சுக்கில பட்சம் பஞ்சமிதிதிகூடிய பதினைந்தாவது வருஷத்தின் முதல் நாளாகிய அத்தினத்தில் அதிகாலையில் ஸ்நான ஸந்தியாவந்தனாதி நேமநிஷ்டைகளை முடித்துக்கொண்டு ரகுகுல சிரேஷ்டருடைய பாதுகைகளைத்தன் சிரமீது வைத்துக்கொண்டுபட்டத்து யானை, மந்திரி முதலானவர்களுடன் புறப்பட்டுத் தென்றிசை நோக்கிச் செல்லுகையில், கோலாகலத்துடன் வரும் புஷ்பகவிமானத்தைக் கண்டான்; கண்டதும் பரமாநந்தங் கொண்டு அதிக வேகமாக எதிர்கொண்டு சென்று ராமபிரானைப் பார்த்துச் சாஷ்டங்கமாக நமஸ்கரித்தான். ராமர் தமது இரண்டுகரங்களாலும் பரதனை எழுப்பி ஆலிங்கனஞ் செய்துகொண்டதுமன்றி அக்காலமே அநந்தமான ராமரூபங்கொண்டு அங்கு வந்திருந்த யாவரையும் ஏககாலத்தில் தழுவிக்கொண்டு மகிழ்ந்தார். இப்படி அநந்தமான ராமமூர்த்திகளைப் பார்த்து, ஜனங்கள் யாவரும் ஆச்சரியமடைந்தார்கள். பிறகு ராமர் கண்களில் ஆனந்தபாஷ்பம் சொரியப் பரதனைப்பார்த்துச் சமாதானப்படுத்தி, உடனே தமது தாய்மார் மூவரையும் நமஸ்கரித்து, பிறகு வஸிஷ்டர் அருந்ததி இவர்களையும் நமஸ்கரித்து, பற்பல வாத்திய கோஷங்களுடன் வாரநாரிகள் நர்த்தனம் புரிய நந்திக்கிராமஞ் சென்றார். அங்குத் தமது சகோதரர் மூவர்களுடன் தீட்சா நிவர்த்தி செய்துகொண்டு சுகந்த வஸ்துக்களால் மங்கள ஸ்நானஞ் செய்தார். அப்பொழுது, மனோகரமான நவவாத்தியங்களும் முழங்கின. குலஸ்திரீகள் யாவரும் ரத்ந தீபங்களைக் கொண்டு ராமபிரான் முதல் நால்வருக்கும் நீராஜனம் செய்தார்கள். அப்பொழுது ஸீதையும் கௌஸல்யை முதலான மாமிமார்களையும் அருந்ததி வஸிஷ்டர்களையும் வணங்கி, மற்றுமுள்ள பிராமணர்களையும் பெரியோர்களையும் கிரமப்படி வணங்கி மகிழ்ந்தாள். பிறகு கௌஸல்யை முதலியவர்கள் ஸீதையைத் தழுவிக்கொண்டு, வாத்திய கோஷத்துடன் மங்கள ஸ்நானஞ் செய்வித்து வஸ்திராபரணாதிகளால் அலங்கரித்தார்கள். பரதன் ஸ்ரீராமபிரான் பாதுகைகளைப் பூஜித்து, அவைகளைப் பக்தியுடன் அவருடைய பாதபத்மங்களிற்

சேர்த்து வணங்கி, அவரைப்பார்த்து "ஜகதீசா! உமது மகிமையால், என்னிடத்தில் நியாஸமாக வைத்திருந்த இந்த ராஜ்யத்தில் சைன்னியபலம் பொக்கிஷம் தானியம் முதலியவைகள் ஒன்றுக்குப் பத்தாக விருத்தியாயிருக்கின்றன. அவைகளுடன் ராஜ்யத்தைத் தங்களிடம் ஒப்புவித்தேன். அது தங்களுக்கு உரிமையானதால், அதை ஏற்றுக்கொண்டு பரிபாலிக்க வேண்டும்" என, ராமபிரானும் அப்படியே யாகட்டும் என்று மனமகிழ்ச்சியுடன்கூறிப் பரதனைத் தமதருகில் உட்காரவைத்துக்கொண்டார். பிறகுரகுநந்தனர் திவ்விய வஸ்திராபரணமணிந்து, ஸீதாதேவியுடன் ரதத்திலேறி வாத்தியகோஷங்களும் ஜயகோஷங்களும் முழங்க நாரிகள் நர்த்தனஞ் செய்ய, அயோத்தியாபட்டணத்திற்குள் பிரவேசித்தார். அப்பொழுது அப்பட்டணத்து மாதர்கள் யாவரும் அவரவர் வீட்டு உப்பரிகை மீதிருந்து இவர்கள் பேரில் புஷ்பங்களை வருஷித்து உடனே அவ்விடமிருந்து கீழே இறங்கி, திருஷ்டி பரிகாரமாக நீராஜனஞ் செய்தார்கள். ராமர் தமது அரண்மனை வாசலுக்கு வந்ததும் ஸீதையுடன் ரதத்தை விட்டிறங்கி ஸீதையை அந்தப்புரத்துக்கு அனுப்பி விட்டு விமானத்தைப் பார்த்து "ஏ புஷ்பகமே! நீ குபேரனிடஞ்சென்று அவருக்குச் சொந்தமாயிரு" என்று ஆஞ்ஞாபித்தனுப்பினார். புஷ்பகம் நல்லதென்று கூறி விட்டுக் குபேரனிடம் சென்றது.



# ஸ்ரீராம பட்டாபிஷேகம்.

பிறகு ராமபிரான் கொலுமண்டபத்தில் வீற்றிருந்து வானர வீரர்கள் ஒவ்வொருவருக்கும் சுகமாக வசிக்கத்தக்க வீடுகளை ஏற்படுத்தும்படி மந்திரிகளுக்கு ஆஞ்ஞாபித்தார். அப்பொழுது குலகுருவாகிய வஸிஷ்டமுனிவர், ஸ்ரீ ராமபிரானுக்கு ராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்விக்கக் கருதி ஒரு நல்லமுகூர்த்தம் நிச்சயித்து மாருதி முதலிய நான்கு வானர சிரேஷ்டர்களைக் கொண்டு

நான்கு சமுத்திரங்களின் தீர்த்தங்களை வரவழைத்து, அநேக மங்களவாத்தியங்கள் முழங்க, அங்கு வந்திருக்கும் அரசர்களைக் கொண்டு பட்டாபிஷேக மகோற்சவத்தை நடத்தி முடித்தார்.

லட்சுமணர் ராமபிரான் பின்னாலிருந்து சந்திரப்பிரகாசம் போன்ற வெண்குடை பிடித்தார். பரதன் வலதுபக்கத்திலும் சத்ருக்னன் இடது பக்கத்திலும் நின்று இரண்டு திவ்வியசாமரங்களை யெடுத்து வீசினார்கள். மாருதி ராமருடைய ஸந்நிதானத்திலிருந்து அவரது திவ்விய பாதுகைகளைச் சிரமீது தாங்கி நின்றார். மகாபலசாலியான சுக்ரீவன் தனது கையில் ஜலபாத்திரத்தை வைத்துக்கொண்டு ஆக்நேய திக்கிலிருந்து ராமரைத் தரிசித்து வந்தான். விபீஷணன் திவ்யமான ஒரு கண்ணாடியைப் பிடித்துக் கொண்டு ஈசானிய திக்கில் நின்றான். வாலிபுத்திரன் அங்கதன் தனதுகையில் தாம்பூலபாத்திரத்தை வைத்துக்கொண்டு ஆக்நேய திக்கிலிருந்து ராமரைத் தரிசித்து வந்தான். மகாவிவேகமுள்ள ஜாம்பவான் நூதன வஸ்திரங்களை அடுக்காகக் கையிலேந்திக்கொண்டு நிருதிதிக்கிலிருந்து ராமரைத் தரிசித்து வந்தார். இவ்விதமான வைபவத்துடன் ராமபிரான் திவ்விய சாய்மானமமையப் பெற்ற சிங்காதனத்தில் வீற்றிருந்தார். லட்சுமணருக்கு இடது புறத்தில் சம்பாதியும், பரதனுக்கு இடது புறத்தில் குகனும் சத்ருக்னனுக்கு இடதுபுறத்தில் மகரத்வஜனும், ஹநுமந்தருக்கு இடதுபுறத்தில் கருடாழ்வாருமிருந்து ராமபிரானைத்தரிசித்து வந்தார்கள். சுக்ரீவன் முதலிய நால்வருடைய இடது புறங்களிலும் சித்ரரதன், சுமந்திரன், விஜயன், தாருகன் இந்நால்வருமிருந்து தரிசித்து வந்தனர். அப்பொழுது தேவாசுரர்கள், யக்ஷர்கள், கின்னரர்கள், கந்தர்வர்கள் இவர்கள் ராஜாக்களுக்குரிய வெகுமானங்களைக் கையிலெடுத்துக்கொண்டு வந்து, ராமபிரானைத் தரிசித்தார்கள். ருஷிகள், மலைகள், புண்ணிய விருக்ஷங்கள், சப்த சமுத்திரங்கள் பல புண்ணிய நதிகள் இவைகள் யாவும் தங்கள் தேவரூபங்களோடு பட்டாபிஷேக மகோற்சவத்தில் ஸ்ரீராமபிரானைத் தரிசிக்க வந்தன. இப்பொழுது தேவேந்திரன் காஞ்சனமாலை ஒன்றை வாயுபகவான்மூலமாக ராமருக்குக்கொடுத்

தனுப்ப, அவர் அதைக்கொண்டுவந்து பட்டாபிஷேகமுகூர்த்தத்தில் ராமபிரான் கழுத்தில் அணிந்தார். பிறகு தேவேந்திரனும் நவரத்னங்களிழைத்தவொரு சொர்ண ஹாரத்தை எடுத்துக்கொண்டு வந்து ஸ்ரீராமபிரானுடைய கழுத்தில் மனமகிழ்ச்சியுடன் அணிந்து தரிசித்தான். தேவர்கள் துந்துபி வாத்தியம் முழக்கினார்கள். கந்தர்வர்கள் பாடினார்கள். வாரநாரிகள் நர்த்தனஞ் செய்தார்கள். ஆகாசத்திலிருந்து ஒரு ஜாமநேரம் இடைவிடாமல் மலர் மாரி பொழிந்தது.

ஏ கார்த்தியாயனி! ஸ்ரீராமபிரான் அரண்யவாச விரதத்தை நிறைவேற்றிய பிறகு அயோத்திக்கு வந்து பட்டாபிஷேகம் செய்துகொண்டு பூபரிபாலனஞ் செய்யவிரும்பி, நந்திகிராமத்திலிருந்த பரதன் என்னைப் பரம பக்தியுடன் பூஜித்தான்; அவனுக்கிரங்கி யான் ஸ்ரீராமபிரானை அவ்விடமே கொண்டுவந்து சேர்த்து அவன் எண்ணத்தை நிறைவேற்றி ராமரைப் பின்வருமாறு துதித்தேன்.



॥ 𑌶𑍍𑌰𑍀𑌶𑌿𑌵𑌃 ॥



𑌸𑍁𑌗𑍍𑌰𑍀𑌵𑌮𑌿𑌤𑍍𑌰𑌂 𑌪𑌰𑌮𑌂 𑌪𑌵𑌿𑌤𑍍𑌰𑌂
𑌸𑍀𑌤𑌾𑌕𑌲𑌤𑍍𑌰𑌂 𑌨𑌵𑌮𑍇𑌘𑌗𑌾𑌤𑍍𑌰𑌮𑍍 ।
𑌕𑌾𑌰𑍁𑌣𑍍𑌯𑌪𑌾𑌤𑍍𑌰𑌂 𑌶𑌤𑌪𑌤𑍍𑌰𑌨𑍇𑌤𑍍𑌰𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌸𑌤𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 । 1

𑌸𑌂𑌸𑌾𑌰𑌸𑌾𑌰𑌂 𑌨𑌿𑌗𑌮𑌪𑍍𑌰𑌚𑌾𑌰𑌂
𑌧𑌰𑍍𑌮𑌾𑌵𑌤𑌾𑌰𑌂 𑌹𑍃𑌤𑌭𑍂𑌮𑌿𑌭𑌾𑌰𑌮𑍍 ।
𑌸𑌦𑌾𑌵𑌿𑌕𑌾𑌰𑌂 𑌸𑍁𑌖𑌸𑌿𑌨𑍍𑌧𑍁𑌸𑌾𑌰𑌂
𑌶𑍍𑌰𑍀𑌰𑌾𑌮𑌚𑌨𑍍𑌦𑍍𑌰𑌂 𑌸𑌤𑌤𑌂 𑌨𑌮𑌾𑌮𑌿 । 2

குக்ஷிவிலாஸம் ஜகதாம் நிவாஸம்
துஷ்டாவிநாஶம் புவநப்ரகாஶம்।
பூதேஷுவாஸம் ஶரதிந்துஹாஸம்
ஶ்ரீராம ... ... நமாமி 3

மந்தாரமாலம் வசநே ரஸாலம்
குணைர்விஶாலம் ஹதஸப்ததாலம்।
க்ரவ்யாதகாலம் ஸுரலோகபாலம்
ஶ்ரீராம ... ... நமாமி 4

வேதாந்தகாநம் ஸகலைஸ்ஸமாநம்
ஹதாரிமாநம் த்ரிதஶப்ரதாநம்।
கஜேந்த்ரயாநம் விகதாவஸாநம்
ஶ்ரீராம நமாமி

ஶ்யாமாபிராமம் நயநாபிராமம்
குணாபிராமம் வசநாபிராமம்।
விஶ்வப்ரணாமம் க்ருதபக்தகாமம்
ஶ்ரீராம ... ... நமாமி 6

லீலாஶரீரம் ரணரங்கதீரம்
விஶ்வைகஸாரம் ரகுவம்ஶஹாரம்।
கம்பீரநாதம் ஜிதஸர்வவாதம்
ஶ்ரீராம ... ... நமாமி 7

கலே க்ருதாந்தம் ஸ்வஜநே விநீதம்
ஸாமோபகீதம் மநஸா ப்ரதீதம்।
ராகேண கீதம் வசநாததீதம்
ஶ்ரீராம ... ... நமாமி 8

ஶ்ரீராமசந்த்ரஸ்ய வராஷ்டகம் த்வாம்
மயேரிதம் தேவி மநோஹரம் யே।
படந்தி ஶ்ருண்வந்தி க்ருணந்தி பக்த்யா
தே ஸ்வீயகாமாந் ப்ரலபந்தி நித்யம்॥

॥ ஸ்ரீ ஶிவ: ॥

ஸுக்ரீவமித்ரம் பரமம் பவித்ரம்
ஸீதாகளத்ரம் நவமேககாத்ரம்
காருண்யபாத்ரம் சதபத்ரநேத்ரம்
ஸ்ரீ ராமசந்த்ரம் ஸததம் நமாமி 1

ஸம்ஸாரஸாரம் நிகமப்ரசாரம்
தர்மாவதாரம் ஹ்ருதபூமிபாரம்
ஸதாவிகாரம் ஸுகஸிந்துஸாரம்
ஸ்ரீ ராமசந்த்ரம் ஸததம் நமாமி 2

லக்ஷ்மீவிலாசம் ஜகதாம் நிவாசம்
லங்காவிநாசம் புவனப்ரகாசம்
பூதேவவாசம் சரதிந்துஹாஸம்
ஸ்ரீராமசந்த்ரம் ஸததம் நமாமி 3

மந்தாரமாலம் வசனே ரஸாலம்
குணைர்விசாலம் ஹதஸப்ததாலம்
க்ரவ்யாதகாலம் ஸுரலோகபாலம்
ஸ்ரீ ராமசந்த்ரம் ஸததம் நமாமி 4

வேதாந்தகானம் ஸகலைஸ்ஸமானம்
ஹதாரிமானம் த்ரிதசப்ரதானம்
கஜேந்த்ரயானம் விகதாவஸானம்
ஸ்ரீ ராமசந்த்ரம் ஸததம் நமாமி 5

ச்யாமாபிராமம் நயனாபிராமம்
குணாபிராமம் வசனாபிராமம்
விச்வப்ரணாமம் க்ருதபக்தகாமம்
ஸ்ரீராமசந்த்ரம் ஸததம் நமாமி 6

லீலாசரீரம் ரணரங்கதீரம்
விச்வைகஸாரம் ரகுவம்சஹாரம்
கம்பீரநாதம் ஜிதஸர்வவாதம்
ஸ்ரீராமசந்த்ரம் ஸததம் நமாமி 7

கலே நிருதாந்தம் ஸுஜனே விநீதம்
ஸாமோபகீதம் மனஸா ப்ரதீதம்

ராகேணகிதம் வசனுதகீதம்
ஸ்ரீராமசந்த்ரம் ஸததம் நமாமி 8

ஸ்ரீராமசந்த்ரஸ்ய வராஷ்டகம் த்வாம்
மயேரிதம் தேவி மனோஹரம் யே
படந்தி ச்ருண்வந்தி க்ருணந்தி பக்த்யா
தே ஸ்வீயகாமாந் ப்ரலபந்தி நித்யம். 9

பரமசிவன் கூறுகிறார்.

சுக்ரீவனுக்கு மித்திரரும் மிகப் பரிசுத்தமானவரும் ஸீதையை நாயகியாகக் கொண்டவரும் நவமேகம்போன்ற சரீரமுடையவரும் காருண்ய பாத்திரரும் தாமரைப் பூப்போன்ற நேத்திரமுடையவருவான ஸ்ரீராமசந்திரரே உமக்கு வந்தனம். 1

ஸம்ஸாரத்தைக் கடந்தவரும் வேதங்களை பிரகாசம் செய்பவரும், பூமிபாரத்தை தீர்த்துத் தர்மபரிபாலனஞ் செய்கிறவரும், திரிகாலங்களிலும் விகாரமற்றவரும், சுகசாகரஸாரமுமான ஸ்ரீராமசந்திரரே உமக்கு வந்தனம். 2

லக்ஷ்மி விலாசமமைந்தவரும் உலகங்களுக் கிருப்பிடமானவரும் இலங்கையை யழித்தவரும் உலகங்களை உற்பத்தியாக்கினவரும் வேதியர்களுடைய கஷ்டநிவர்த்தி செய்து சுகப்படுத்துகிறவரும் சரத்கால சந்திரன்போன்று பிரகாசிக்கும்மந்தஹாஸவதனமுடையவருமான ராமச்சந்திரரே உமக்கு வந்தனம். 3

மந்தாரமாலை பூண்டவரும் தேமாங்கனிக் கொப்பான வாய்மொழியை யுடையவரும் நற்குண நிறைந்தவரும் ஏழுபனைமரங்களை பறுத்தவரும் அரக்கர்குல அந்தகரும் சுரலோக பாலகருமான ராமச்சந்திரரே உமக்கு வந்தனம். 4

வேதாந்த காதரும் எல்லாருடனும் சமனுயிருப்பவரும் கர்வத்தை யடக்குகிறவரும் தேவர்களுக்கு ப்ரதானமானவரும் பக்ஷியை வாகனமாகக் கொண்டவரும், முடிவில்லாதவருமான ராமச்சந்திரரே உமக்கு வந்தனம். 5

நிறத்திலும் குணங்களிலும்பேச்சுக்களிலும் மேன்மையான வரும் அழகான கண்களை யுடையவரும் உலகம் வணங்கத் தக்க வரும் பக்தர்களுடைய கோரிக்கையை நிறைவேற்றுகிறவரு மான ராமசந்திரரே உமக்கு வந்தனம். 6

விளையாட்டுக்காகச் சரீரமெடுப்பவரும் யுத்தகளத்தில் அதி தீரமானவரும் உலகங்களின் ஸாரமானவரும் இரகு வம்சத்துக்கு ஹாரம் போன்றவரும் கம்பீரமான குரலுடையவரும் வாதத்தில் யாவரையும் அடக்கவல்லவருமான ராமசந்திரரே உமக்கு வந்த னம். 7

துஷ்டனுக்கு யமன் போன்றவரும் சுவஜன வணக்க முடையவரும் சாமவேதத்தால் துதிக்கப்பட்டவரும் எப்போதும் தெளிவான மனமுடையவரும் பாடல்களால் துதிக்கப்பட்டவரும் வாசாமகோசரருமான ராமச்சந்திரரே உமக்கு வந்தனம். 8

ஏ ராமசந்திரா! மனோகரமாய் இப்பொழுது நான்செய்த உமது துதியாகிய இந்த அஷ்டகத்தைப் பக்தியுடன் படிப்பவர்க ளும் கேட்பவர்களும் இஷ்டார்த்தசித்திகளைப் பெறுவார்களாக என்று ராமசந்திரரைத் துதித்துவிட்டு அச்சபையின் கண் இருந் தேன். அச்சமயத்தில் மகானுகிய தசரதர் தேவசேனைகள் சூழ ஓர் ரதத்திலேறிக்கொண்டு சூரியப்பிரகாசம்போன்ற ரூபத்துடன் ராமபிரான் சபைக்கு வந்து, தமது சகோதரருடனும் ஸீதா பிராட்டியுடனும் பட்டாபிஷேகமகுடஞ் சூட்டப் பெற்றுச் சிங்கா தனத்தில் வீற்றிருக்கும் ராமரைப் பார்த்து பரமாத்மாவாகிய அவரைத் துதித்து மகிழ்ந்து பின்வருமாறு கூறினர். 9

தசரதர் கூறுகிறார்.

ஏ மகா பாகுவே! நீ பதினான்கு வருஷகாலம் வனவாசத்தை முடித்து அயோத்திக்கு வந்து இப்பொழுது பட்டாபிஷேகஞ் செய்துகொண்டு பக்தர்களுடன் சிங்காசனத்தில் வீற்றிருக்கக் கண்ட நான் தன்னியனானேன். எனது தாய் தந்தையரும் தன்னிய ரானர்கள். நமது குலமே தன்னியமாயிற்று. நம்தேசமும் தன்

னிய மாயிற்று. இம்மஹோத்சவத்தைப் பார்த்து மகிழும் உன் தாய் கௌஸல்லியையும் தன்னியையாளுள் என்று சொன்னார்.

இவ்விதம் கூறிய தசரத மகாராஜனை ராமபிரான் வணங்கினார். லட்சுமணன் பரதன் சத்ருக்னன் மந்திரிமார்கள் கௌசல்லியை முதலிய பட்ட மகிஷிகள் யாவரும் ரதத்தின் மேலிருக்கும் தசரதமகாராஜனை மகிழ்ச்சியுடன் வணங்கினார்கள். அப்பொழுது தசரதர் அவர்கள் ஒவ்வொருவரையும் தனித்தனியே க்ஷேமம் விசாரித்துவிட்டு ராமசந்திரனது பூஜையை ஏற்றுக்கொண்டு என்னுடன் அவ்விடம் விட்டுத்திரும்பினார். பிறகு எல்லாரும் அவரவரிடம் போய்ச் சேர்ந்தார்கள். நானும் இந்தக் கைலயம் பதிக்கு வந்து சேர்ந்தேன். இவ்விதமான மஹோத்சவத்துடன் சர்வலோக சுககரரான ஸ்ரீராமபிரானுக்குப் பட்டாபிஷேகம் நடந்தபின், பூமி செழிப்புற்றது. மரங்கள் எல்லாம் பூத்துக் காய்த்தன. வாசனையில்லாத புஷ்பமும் வாசனையை யடைந்தது. இச்சமயம் ராமபிரான் பணங்களைக் கோடிக் கணக்காகவும் அசுவங்கள் பசுக்கள் விருக்ஷங்கள் இவைகளை லட்சக்கணக்காகவும் வேதியர்களுக்குத் தானம் செய்தார். பிறகு சூரியகாந்திக்குச் சமமான ஒளியுள்ள நவரத்னமயமான ஒரு மாலையை எடுத்து மகிழ்ச்சியுடன் சுக்ரீவனுக்குக் கொடுத்தார். விபீஷணனுக்கு ஒரு சிரோ பூஷணத்தைப் பரிசளித்தார். அங்கதனுக்கு இரண்டு புஜ கவசங்களைப் பரிசளித்தார். கோடிசந்திரப் பிரகாசம் பொருந்திய ஒரு ரத்னமாலையை ஸீதாதேவியிடம் கொடுத்து ஏ பிரியநாயகி! இந்த மாலையை உனக்குப் பிரியமானவனுக்குக் கொடு" என்று கொடுக்க, அதை ஸீதாதேவி அன்புடன்வாங்கி முன்னேயிருந்த ஹநுமந்தருக்கு மனமுவந்தளித்தாள். மாருதி அதை வாங்கித் தமது கழுத்தில் அணிந்துகொண்டு மகா கௌரவம் பெற்று விளங்கினார். அப்பொழுது ராமர் ஹநுமாரைப் பார்த்து "ஏ மாருதி! உன் விஷயத்தில் எனது மனம் மிகவும் மகிழ்ச்சியடைந்திருக்கிறது. உனக்குவேண்டிய வரங்களைக்கேள், அவைகளைக் கொடுக்கிறேன்" என்றார்.

இதைக்கேட்ட ஹநுமார் 'ஏநாதா! உமது நாமத்தைஸ்மரித்து நான் இன்னும் திருப்தியடையவில்லை; ஆதலால் இவ்வுலகத்தில் உமது திருநாமம் பிரசாரமாய் உள்ளமட்டும் அடியேன் உமது நாமோச்சாரணத்தைச் சலிப்புறுமல் செய்துகொண்டிருக்க வேண்டும். எனது சரீரமும் அதுவரையி லிருக்கவேண்டும். எங்கெங்கே உமது சரித்திரம் நடைபெறுகிறதோ அங்கங்குத்தவறு மல் யான் சென்று அதைச்சிரவணம் செய்யவேண்டும். தேவாலயம் நதிதீரம் தடாகம் நடைவாவி முதலிய இடங்களிலன்றி, மற்ற இடங்களில் நடக்கும் உமது சரித்திரத்தின் மகிமை ஆறுநாழிகை வழிக்கப்பாலும் விளங்கவேண்டும். இவைகளேயான் விரும்பிய வரங்கள்' என்று தெரிவித்தார். உடனே ராமபிரான் 'நீ கேட்டபடியேயாவும் நடை பெறும். நீ முக்தனுகி இந்தக் கற்பகாலம் முழுவது மிருந்து இதன் முடிவில் எனது சாயுஜ்யம் பெறுவாய்; இதிற் சிறிதும் ஐயமில்லை" என்று திருவாய் மலர்ந்தருளினர்.

பிறகு ஸீதாபிராட்டி ஹநுமந்தரைப்பார்த்து 'ஏ மாருதி! நீரிருக்கும் கிராமம் தோட்டம் பட்டணம் பசுக்கொட்டடி தேவாலயங்கள் நதிதீரம் க்ஷேத்திரங்கள் தீர்த்தங்கள் தடாகக்கரைகள் நந்தவனங்கள் அரசமரம் ஆலமரம் பிருந்தாவனம் முதலியவைகளில் உலகத்து ஜனங்கள் உம்மை வணங்கித் தாங்கள் இடையூறு நீங்கும்பொருட்டு உமது மூர்த்தியைப் பூஜிப்பார்கள். உம்மை நினைத்தவர்களுக்குப்பூதம் பிரேதம் முதலிய துஷ்டகிரகங்களின் தோஷம் சிறிதும் அணுகாது' என்று அன்புடன் வரமளித்தாள். அங்குவந்திருக்கும் மற்றவானரவீரர்கள் யாவருக்கும் மதிப்பிடற்கரியஆபரணங்கள் வஸ்திரங்கள் முதலியவைகளை ராமர் பரிசளித்தார். பிறகு சுக்ரீவன் முதலிய வானரர்கள் விபீஷணன் மகாத்வஜன் சம்பாதி குகன் மற்ற அரசர்கள் முதலியவர்கள்யாவருக்கும் அவரவர்களுக்குத் தக்கபடி வஸ்திராபரணங்களை வெகுமதியாகக் கொடுத்து மகிழ்ந்தனர்.

இதன் பின் ராமபிரான் எல்லாருடனும் போஜன சாலைக்குச் சென்று போஜனம் செய்தார். ராமர் போஜனம் செய்து முடியும் தருணத்தில் மாருதி எழுந்திருந்து அவர்முன்பு சென்று மூக்

காலியின்மேல் வைத்திருக்கும் பக்குவான்னங்கள் நிறைந்த சொர்ணபாத்திரத்தைத் தமது இடதுகையால்எடுத்துத் தூக்கிப்பிடித்துக் கொண்டு ராமரது போஜன சேஷத்தைத் தாம் புசித்துவிட்டு மீந்ததை மற்ற வானரவீரர்களுக்குங் கொடுத்தார். அப்பொழுது விபீஷணன் முதலியவர்களும் தங்கள் தங்கள் போஜனஸ்தானத்தை விட்டு உடனே எழுந்திருந்து, மாருதியைப்பார்த்து 'ஏ மாருதி! நீ நல்ல காரியம் செய்தாய்' என்று அவரைத் துதித்து விட்டு அவர் கையில் வைத்திருக்கும் ராமபோஜன சேஷத்தை எடுத்துப் புசித்தார்கள். மற்றவர்களும் அந்தப் போஜனத்தை விரும்பி ஓடிவந்தார்கள். இது ஒரு கோலாகலமாக இருந்தது. இதை ராமரும் ஸீதையும் பார்த்து மகிழ்ந்து நகைத்தார்கள். சுக்ரீவன் முதலியவர்கள் இவ்விதமாகப் பல கோலாகலங்களைச் செய்துகொண்டு சுகமாகச் சிறிதுகாலம் ராமபிரானோடு வசித்தார்கள்.

இப்படி யிருந்து வருகையில் புஷ்பக விமானமானது மறுபடியும் ராமபிரான் முன்வந்து வணங்கி "ஏ மகாபிரபுவே! நான் இப்பொழுது குபேரன் உத்தரவுப்படி இங்கு வந்திருக்கிறேன். அவர் எனக்குச்செய்த உத்தரவாவது—"ஏ விமானமே! நீ முன் ராவணனால் ஜயிக்கப்பட்டு, அவனிடமிருந்தாய்; இப்பொழுது ராவணனை ராமர் ஜயித்து விட்டபடியால் நீ அவரிடம் சென்று அவர் பூவுலகத்திலுள்ள வரையில் நீ அவர் சுவாதீனத்திலிருந்து வரவேண்டும். அவர் வைகுண்டத்துக்குச் சென்றபின் நீ என்னிடம் வரவேண்டும். ஆகையால் நீ ராமபிரானிடம் செல் என அஞ்ஞாபித்தார்" என்று விமானங் கூறியது. உடனே ராமர்விமானத்தைப்பார்த்து 'நீ சுக்ரீவாதி வானரங்களை அவரவர்களிருப்பிடத்தில் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு பின், இந்த அயோத்தியா பட்டணத்துக்கு வெளியில் வாசஞ்செய்து வா' எனக் கட்டளையிட்டார். அக்கட்டளைப்படியே புஷ்பகம் சுக்ரீவன் முதலியவர்களை அவரவர்களிருப்பிடத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்த்துவிட்டு, அயோத்தியா பட்டணத்துக்கு வெளியே வாசஞ்செய்து வந்தது. அன்று முதல் விபீஷணன் லங்காபட்டணத்தைத் தருமநெறிதவறாமல் ராஜ்ய பரிபாலனஞ்செய்து வந்தான்.

மகரத்வஜன் பாதாளலோகத்தைத் தர்மமாக ஆண்டுவந்தான். அப பொழுது கருடன் சம்பாதிக்கு யுவராஜ்யபட்டாபிஷேகஞ்செய்து தன் ராஜ்யத்தில் வைத்துக்கொண்டான். வானராதிபதியாகிய சுக்ரீவன் கிஷ்கிந்தா ராஜ்யத்தை நீதி தவறு தாண்டுவந்தான். குகன் சிருங்கி பேரபுரத்தில் ஸந்தோஷத்துடன் அரசாண்டு வந் தான். வாயுநந்தனராகிய மாருதி ராமரை வணங்கிவிட்டுத் தவம் புரிய இமயமலைச் சாரலுக்குச் சென்றார். விபீஷணன் முதலிய யாவரும் ஐந்து, ஏழுநாட்களுக் கொருதடவை ஸ்ரீ ராமபிரானைத் தரிசிக்க அயோத்திக்கு வருவதும் அங்கு வந்து ஐந்து ஏழுநாள் ராமருடன் வசித்து விட்டுப் பிறகு தங்கள் தங்கள் பட்டணஞ் செல்வதுமாக இருந்துவந்தார்கள். லட்சுமணர் பிரியங்கொள் ளாதிருந்தும் ராமர் அவருக்கு யுவராஜ்ய பட்டாபிஷேகஞ் செய்வித்து, தாம் பிரஜைகளிடத்தில் மிக்க அன்புபாராட்டி அவர்களுக்குச் சந்தோஷமுண்டாகும்படி ராஜ்ய பரிபாலனஞ் செய்து வந்தார். லட்சுமணர் ராமரிடத்தில் மிக்க பக்தி செலுத்திக்கொண்டு அவருடைய பணிவிடையிலேயே புத்தி செலுத்திவந்தார்.

ஏ தேவி! முன் விசுவாமித்திரர் யாகஞ்செய்தகாலையில் அவர் யாகத்தை நடத்த * அவபிருத ஸ்நானம் செய்து முடித்தாரென் றும், ஸ்ரீராமபிரான்யுத்தயாகத்தைஅப்பொழுதே ஆரம்பித்து, முடிக்காமல் நிறுத்தினரென்றும் கூறியிருக்கிறேன் அல்லவா ? அந்த யுத்தயாகத்தை ஸ்ரீ ராமபிரான் பட்டாபிஷேகம் பெற்றுத் தமது பதவியிலிருந்து இப்பொழுது முடித்தார். இந்த ரணயா கத்தை விஸ்தாரமாக உனக்குக்கூறுகிறேன் கேள்-இந்த ரணயாகத் துக்கு அக்நிகுண்டம் யுத்த பூமியில் சத்ருக்களுக்குப் பின்னிடா மல் தைரியமாய் எதிர்த்து நிற்பது தான்(1) வேதவிதி என்றும் பிர்மஸத்வம் என்றும் சொல்லப்படும். யுத்தத்தில் உண்டாகும்

---

* தீட்சையை வகித்து, அதன் முடிவில் செய்யும் ஸ்நானம்.

1 ஓர்பிடி தர்ப்பையை முறுக்கி ஒன்றாய்க் கட்டியிருப்பது.

பிர்மஸத்வம்—பிர்மதேவருக்கு முக்கியமானது.

ஆயுதங்களின் சப்தமே (2) கடாடோபம்; பாணங்களைக் கற்களிற் றீட்டுவதே (3) சுருக் சுருவங்களைத் துடைப்பதாகும். பாணங் களைச் சுத்திசெய்வதற்காகத் தரையில் பரப்புவதே (4) பரிஸ்தர ணம்; யுத்தத்தில் ஒவ்வொருவர் மனத்திலும் உண்டாகும் தைரி யமே(5) பரிசமூஹனம். யமனே யகாக்நி. மாம்சத்தை அக்நியில் ஆகுதிபண்ணச் சாதகமான (6) சுருவம் பாணமே. சத்ருக்க ளுடைய தேகத்தை அறுப்பதினால் பெருகும் ரத்ததாரையே (7) வசோர்த்தாரை. யுத்தகளத்திலுண்டாகும் பயங்கரமான ஹா ஹா காரமே(8) ஓங்காரமும்(9) வஷட்காரமுமாம். சஸ்திரங்களின் காந்தியே யகாக்நியின் ஜ்வாலை. சரீரங்களிலிருந்து உண்டாகும் வேர்வையே புகை. யாக குண்டத்திலிருந்து கிளம்பி ஓங்கி எரி யும் ஜ்வாலையைத் தணிக்கும் (10) பிரஷதாஜ்யஸேசனமானது இங்கு உத்தமாஸ்திர ப்ரயோகமேயாம். தீப பலியென்பது இங்கு உணர்வுடன் உயிரை இழப்பதே. பலி தீபங்களை யாககுண்டத் துக்கு எடுத்து வருகிறவர்கள் தேகாபிமானம் வைத்தவர்களே யாம். சிரங்களை அறுத்துக்குவிப்பதே பூர்ணாகுதி. ஜயவீரர்கள் இடசாரி வலசாரியாக வருவதே பிரதக்ஷிணங்கள். ஸ்ரீராமபிரான் தமது பதவியையளிப்பதே யாகதக்ஷிணையாம். தேவர்கள் பொழி யும் மலர்மாரியே வேதியர்களுடைய ஸ்நானம். யுத்தத்தில் ஜயம் பெறுவதே யாகசிரேயஸ் பெறுவது. ஸ்ரீராமரைச் சேர்ந்தவர் கள் ஆனந்திப்பதே சராசர ஆனந்தமாம். யுத்தத்தில் மாண்ட வர்களைத் தின்று பூதங்கள் திருப்தியடைவதே பிராமணபோஜன

2 யகடாம் பீகம்.

3 ஹோம நெய் விட்டிருக்கும் பாத்திரம்.

4 அக்நிக்கு நாற்புறமும் சதுரமாகத் தர்ப்பங்களைப் பரப்புதல.

5 அக்நிக்குச் செய்யும் அலங்காரம்.

6 நெய்யை எடுக்கும் மரக்கரண்டி.

7 மந்திரோச்சாரணம் முடியும்வரையில் ஹோமகுண்டத்தில் இடை யறு தொழுகும் நெய்த்தாரை.

8 ஓம்—ஆரம்பம்.

9 வௌஷட் முடிவு.

10 அக்நியில் நெய் பொட்டுப் பொட்டாய் விடுதல்.

மாம். யாகபலியைப் புசித்த தோஷமுடையவனே தேகாபிமான மேலிட்டு ராமபிரான் திருக்கரத்தில் மரணமடையப் பயந்து ஓடிப்போய் பந்தத்திலுழலுகிறவனும். சுபாகுவுடன் ராமர் யுத்த யாகத்தை ஆரம்பித்ததும் விசுவாமித்திரர் யாகம் ஆரம்பித்ததும் ஒரே க்ஷணத்திலாயினும் விசுவாமித்திரர் அப்பொழுதே தாம் ஆரம்பித்த யாகத்தை முடித்துவிட்டார். ஸ்ரீ ராமபிரான் கலாக்நி திருப்தியடையாமலிருந்ததைக்கண்டு அவனை மறுபடியும் திருப்தி செய்து வைப்பதற்காகத் தாம் ஆரம்பித்த ரணயாகத்தைப்பூர்த்தி செய்யாமல் நிறுத்தினர். ராமபிரான் இந்த ரணயாகத்தில் சித்ராகுதி செய்யக்கருதி பூமியைப் பாத்திரமாக்கி, அதை விராதனுடைய ரத்தத்தால் பாத்திர ப்ரோக்ஷணைசெய்தார். சூர்ப்பநகையினுடைய மூக்கையும் செவியையும் அறுத்ததே பவித்திர தர்பையின் சேதம். ஐந்து பிராமணாகுதிகளுக்குப் பதிலாக கரன் தூஷணன் திரிசிரஸ் மாரீசன் கவந்தன் இவ்வைந்து பேர்களையும் க்ஷணத்தில் கொன்றார்.

முடிந்த சிகையை அவிழ்ப்பதற்குப் பதிலாகச் சபரிக்குப் பந்தத்தை யொழித்து முக்தியளித்தார். பிறகு சுத்த ஜலத்தை ஸ்பரிசிப்பதற்குப் பதிலாக வாலியின் நேத்திரத்திலடித்து அந்த ரத்தத்தை ஸ்பரிசித்தார்.லங்கையாகிய அடுப்பில் தீமூட்டி, அதில் கும்பகர்ணன் இந்திரஜித்து இவர்களாகிற அன்னம் பக்குவம் பண்ணப்பட்டது. அரக்கர்கள் யாவரும் சாக பதார்த்தமாகச் சேதிக்கப்பட்டார்கள். சரணன் முக்கியமான அன்னமானான், பிரகஸ்தன் வடகமானான், நிகும்பன் அப்பளமானான், கும்பன் லவணமானான், காலநேமி என்பவன் பாயஸமானான், அதிகாயன் சர்க்கரையானான், ஐராவணன் பாலானான், மைராவணன் நெய்யானான், ராவணன் யுத்தயாகத்தின் சமாப்தியில் ததியோதனமானான். இவைகளைப் பூமியாகிற பாத்திரத்தில் வைத்துக் காலனாகிற அக்நிக்கு நிவேதித்தார். அங்கு மிஞ்சிய தோல் மயிர் எலும்பு முதலியவைகளே பலி போடுவதாயின. இவ்விதம் யமனாகிற அக்நி திருப்தி யடைந்ததின்மேல், ராமபிரான் அயோத்தியில் பிரவேசித்ததே ரணயாகத்தின் முடிவாம்.

பிறகு பட்டாபிஷேகம் செய்து கொண்டதே ரணயாகத்தின் அவபிருத ஸ்நானமாம். சகல உலகங்களுக்கும் மங்களமுண்டாகவேண்டுமென்பதைக் கோரி ஸ்ரீ ராமபிரான் இந்த ரணயாகத்தை உலகமறிய நடத்தி முடித்தார். ஏ பார்வதி! இந்த ரணயாக வைபவத்தை நீயும் அறிய உனக்குக் கூறினேன். ஸ்ரீராமர் பரமாத்மா, அதிநிர்மலர், நான் என்னும் அகங்காரம் அற்றவர், நிர்விகாரர், தமக்குத்தாமே தமது ஆனந்தத்தை அனுபவிப்பவர், ஆயினும் அவர் உலகரக்ஷண நிமித்தமாக அவதரித்து, கிரகஸ்த தர்மத்தை ஆச்ரயித்துப் பற்பல தர்மங்களை நடத்தி ஹிதோபதேசம் செய்து ராஜ்ய பரிபாலனம் நடத்திவந்தார். அக்காலத்தில் ஸ்திரீகள் அமங்கலையானதில்லை. சர்ப்பங்கள் தீண்டுவதில்லை. ஒருவரையும் நோய் அணுகுவதில்லை. உலகத்தில் ஒரு தந்தை தன் குழந்தைகளைப் பரிபாலிப்பதுபோல் பிரஜைகளைத் தமது குழந்தைகளாகவே பாவித்து, அவர்களை ரக்ஷித்து ஸீதையுடனும் சகோதரர்களுடனும் சாகேத நகரத்தில் சுகமாக வசித்துவந்தார்.

ராமர் ராஜ்ய பட்டாபிஷேகமாகிய

12-வது சருக்கம் முற்றிற்று.



